REGD. No: TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு










மலர்: 4 சென்னை 9-6-1980 திங்கள் (★) ❋ ● ❋ (✱) வெளியீடு 10-6-1980 செவ்வாய் இதழ் 211

## நாலரைக்கோடி தமிழ்நெஞ்சங்கள் வாழ்த்துரைக்க-நல்லறிஞர் பாராட்ட

## அண்ணாவின் அரசு மீண்டும் அரியணையில் அமர்ந்தது

# முதல்வராக புரட்சித்தலைவர் பதவி ஏற்றார்

### 17 அமைச்சர்களும் பதவி ஏற்பு - ஆளுநர் பதவிப் பிரமாணம் செய்து வைத்தார்

சென்னை, ஜூன். 9- நாலரைக் கோடி தமிழ் மக்களின் நல்வாழ்த்துக்களுடன் மீண்டும் அண்ணாவின் அரசு பொறுப்பேற்றது புரட்சித்தலைவரும் மற்ற அமைச்சர்கள் 17 பேரும பதவி ஏற்றனர்,

மீண்டும் அண்ணாவின் அரசு பதவி ஏற்கும் சரித்திரப் புகழ்மிக்க நிகழ்ச்சியைக் காண பல்வேறு பகுதிகளிலிருந்தும் 30 லட்சத்துக்கு மேற்பட்ட மக்கள் கூடி இருந்தனர்,

புரட்சித்தலைவர் இன்று அண்ணா சமாதிக்கு மலர்வளையம் வைத்து வணங்கினார். அமைச்சர் பதவி ஏற்கும் நாவலர் உள்ளிட்ட 17 பேரும் மலர்வளையம் வைத்து வணங்கினர்.

அதன் பின் பதவி ஏற்பு விழா நடைபெறும் கலைவாணர் அரங்கத்துக்கு வந்தார்கள்.

கலைவாணர் அரங்கம் அதிகாரிகள் பிரமுகர்களால் நிரம்பி வழிந்தது.

வெளியே உள்ளவர்களும் கேட்கும் வகையில் ஒலி பெருக்கி வசதி செய்யப்பட்டிருந்தது.

ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி 12-23 மணிக்கு கலைவாணர் அரங்கத்துக்கு வந்தார்

அரசுத் தலைமைச் செயலாளர் வி. கார்த்திகேயன் அவரை வரவேற்றார். மெய்காப்பாளர்கள் இருவர் முன்செல்ல கவர்னரின் செயலாளர் பின் தொடர அரங்கத்தின் மேடைக்கு ஆளுநர் வந்தார். அனைவரும் எழுந்து ஆளுநருக்கு மரியாதை செலுத்தினார்கள் தொடர்ந்து புரட்சித்தலைவர் வந்தார்.

பின்னர் பதவி ஏற்பு விழா தொடங்கியது கவர்னரின் செயலாளர் உறுதிமொழி பிரமாணத்தை புரட்சித் தலைவரிடமும் அமைச்சர் பொறுப்பு ஏற்கும் 17 பேரிடமும் தந்தார்

முதலில் புரட்சித்தலைவருக்கு பதவிப்பிரமாணமும் ரகசியக் காப்புப் பிரமாணமும் செய்து வைத்தார் கவர்னர்.

அதன்பின் நாவலர், பண்ருட்டி ராமச்சந்திரன், கே.ஏ.கே., எஸ். டி எஸ், சி அரங்கநாயகம், ஆர்எம்வீ, காளிமுத்து, பொன்னையன், குழந்தைவேலு, ராகவானந்தம், டாக்டர் ஹண்டே, ராஜாமுகமது, எஸ். முத்துசாமி. எஸ். திருநாவுக்கரசு, எஸ். என். ராஜேந்திரன், எம். விஜயசாரதி திருமதி கோமதி சீனிவாசன் ஆகிய 17பேரும் பதவி ஏற்றனர்.

ஆளுநர் ஆங்கிலத்தில் பதவிப் பிரமாண வாசகங்களை வாசித்தார் அவற்றை தமிழில் கூறி புரட்சித்தலைவரும் மற்ற 17பேரும் பதவிப்பிரமாணம் மேற்கொண்டு பதவி ஏற்றனர் 1-25க்கு விழா முடிவடைந்தது ஆளுநர்சென்ற பின் அனைவரும் புறப்பட்டனர் முதல்வர் புரட்சித் தலைவரும் அமைச்சர்களும் அண்ணா சிலைக்கு வந்தனர் புரட்சித்தலைவரும் அமைச்சர்களும் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தார்கள்

கொளுத்தும் வெய்யிலையும் பொருட்படுத்தாமல் அண்ணாசிலை அருகே கடல் அலைபோல் திரண்டு வரலாறு படைத்த தமிழ்ப் பெருங்குடி மக்களிடையே முதல்வர் புரட்சித்தலைவர் உறுதி ஏற்று சபதமிட்டார்.

### 7 ஆயிரம் பஸ்கள்

சென்னையில் புரட்சித்தலைவர் பதவி ஏற்பை காண தமிழகம் முழுவதுமிருந்து 7 ஆயிரம பஸ்களில் தொண்டர்கள் வந்துள்ளனர் மற்றும் இரண்டாயிரம் கார்களிலும தொண்டர்கள் சென்னை வந்துள்ளனர் நகரமே ஸ்தம்பிக்கும் வகையில் இக்கூட்டம் அமைந்திருந்தது.

### மேடை அலங்காரம்: புரட்சித் தலைவரை வாழ்த்தும் அண்ணா

சென்னை, ஜூன் 9- தமிழகத்தில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்ற கழக அமைச்சரவை புரட்சித்தலைவரின் தலைமையில் இன்று பதவி ஏற்றது மந்திரி சபை பதவி ஏற்பு விழா சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெற்றது இதையொட்டி, கலைவாணர் அரங்கம் கோலாகலமாக மலர்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது.

கலைவாணர் அரங்கத்தில் உள்ள மேடை பல வண்ண பூக்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அரங்கம் முழுவதும்வண்ண விளக்குகள் மின்னிய வண்ணம் இருந்தன.

மேடையில் கவர்னர், முதல் அமைச்சர் மற்றும் சகஅமைச்சர்கள் அமருவதற்காக ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

அரங்க மேடையின் பின்பக்கம் புரட்சித் தலைவருக்கு அண்ணா ஒரு துண்டு போர்த்தி வாழ்த்துக் கூறுவது போல ஒரு படம் வரையப்பட்டு வைக்கப் பட்டிருந்தது.

மேடையின் வலது பக்கம் தந்தை பெரியாரின் படம் இருக்கிறது. மற்றொரு பகுதியில் காந்தி; காமராஜ், ராஜாஜி ஆகியோரின் படங்களும் இடம் பெற்றிருந்தன.

அரங்க மேடையின் இடது பக்கத்தில் அம்பேத்கர், காயிதே மில்லத், பசும்பொன் முத்துராமலிங்க தேவர் ஆகியோரின்

(2- பக்கம் பார்க்க)



அமைச்சர்கள் பட்டியலை ஆளுநரிடம் புரட்சித்தலைவர் வழங்கிய உடன் ஆளுநர் மாளிகையில் எடுக்கப்பட்ட படம். டாக்டர் நாவலர், பண்ருட்டியார், எஸ். டி. எஸ். ஆகியோரும் உடன் இருக்கிறார்கள்,

## சென்னை நகரை குலுக்கிய 30லட்சம்மக்கள்முன்பு

### அண்ணாவின் சிலையருகே

# புரட்சித்தலைவர் சபதம்

### மக்கள் முன் உறுதி ஏற்க விரும்பிய தலைவருக்கு வரலாறுகாணாத வரவேற்பு

சென்னை. ஜூன் 9-சென்னை மாநகரை குலுக்கிய 30 லட்சத்திற்கும் மேற்பட்ட மக்கள் முன்பு அண்ணாசிலையருகே புரட்சித்தலைவர் மக்களின் நல்வாழ்விற்கு உறுதிகூறி சபதம் ஏற்றார்.

சென்னை மாநகர வரலாறு கண்டிராத வகையில்புரட்சித்தலைவர் முதல்வராகப் பொறுப்பேற்கும் இன்று சென்னை மக்கள் வெள்ளத்தில் திணறியது.

புரட்சித்தலைவரின்படை பெருத்ததால் பார் சிறுத்ததோ என்று எண்ணும்படி எங்கெங்கு நோக்கினாலும்மக்கள்கடல் எழுச்சியுடன் முழங்கி நின்றது.

எங்குபார்த்தாலும் தலைகள்-தலைகள்-தலைகள்;

வீதிகள்தோறும் சாலைகள் தோறும் அண்ணாவின் உருவம் அமைந்த இருவண்ண கொடிகள்-கொடிகள்!

அண்ணாவின் கொடி இல்லாத இடமே இல்லை, அண்ணாவின் கழகத்தை சேர்ந்த தொண்டர் இல்லாத இடமே இல்லைஎனும்படி இன்றுசென்னை காட்சியளித்தது.

இதுவரை சென்னை மாநகர் காணாத மக்கள் வெள்ளம் சென்னை நகர் எங்கும் அலைமோதிய காட்சி,புரட்சித் தலைவரின் மாட்சிக்கு சாட்சியாக இருந்தது.

நேற்று முதலே சென்னை நகரை நோக்கி வந்த ரெயில்களிலும், பஸ்களிலும் கழக தொண்டர்கள் நிறைந்து வந்தனர்.

### மறக்க முடியாத

சென்னை நகர வீதிகள் தோறும் தெருக்கள் தோறும், ஏன் காலியிடங்கள் தோறும் கழக தொண்டர்கள், அண்ணாவின் உருவம் பதித்த கழக கொடியை ஏந்தி உலாவந்த காட்சி வாழ்நாள் முழுவதும் மறக்க முடியாத காட்சியாகும்.

சென்னைநகரின் சுற்றுப்புறங்களில் இருந்தெல்லாம் ஆண்களும் பெண்களும் பஸ்களில்இடமின்றி கால் நடையாகவே வந்தனர் அங்காங்கே பஸ்கள் நிறுத்தப்பட்டதால் அதில் வந்தவர்களும் இறங்கி நடந்து வந்தனர்.

இனி சென்னை நகரில் மக்கள் நிற்கக்கூட இடம் இருக்காதோ என கூறத்தக்க வகையில் 30 லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள்சென்னையில்குழுமினர். அண்ணாசிலை அமைந்துள்ள இடத்தில் நான்கு சாலைகளிலும் காலை 7 மணியிலிருந்து விழாவைக் காண வேண்டும் என்ற ஆர்வத்தோடு முன்னதாகவே கழகத் தோழர்கள் அமரத் தொடங்கிவிட்டனர்.

இப்படையை வெல்ல எப்படையும் இல்லை என்பதை இன்று சென்னையில் கூடிய புரட்சித்தலைவரின் பெரும்படை அகிலத்திற்கு அறிவித்தது.

### வீதிகள் தோறும்..

புரட்சித்தலைவர் தலைமையில் கழக அமைச்சரவை பொறுப்பேற்கும் இன்று சென்னை நகரம் முழுதும் வீதிகள்தோறும் கழகத் தோழர்கள் கொடிகளாலும், தோரணங்களாலும் அலங்கரித்து வைத்திருந்தனர் பல பகுதிகளில் பல்லாயிரக்கணக்கான ஏழை எளிய மக்களுக்கு சர்க்கரை பொங்கல் வழங்கப்பட்டது.

சில இடங்களில் வடை பாயசத்துடன் விருந்து வழங்கப்பட்டது.

112 நாட்கள் இடைவெளிக்குப்பின்பு அண்ணாவின் அரசு புரட்சித் தலைவரின் தலைமையில் மீண்டும் மலருவதைக்காண கூட்டம் கூட்டமாக குடும்பம் குடும்பமாக அண்ணன் சிலையின்காலடியில் அண்ணா சாலையில் தமிழகமே கூடியிருந்தது.

இது குடும்ப விழா-தமிழகத்தின் திருவிழா! தமிழ்க் குடும்பத்தின் திருவிழா!- என்பதை அவனிக்கே அறிவிப்பதைப் போல் 30 லட்சத்திற்கும் மேற்பட்ட மக்கள் கூடியிருந்தனர்.

அண்ணாசாலை முழுவதும் எங்கு நோக்கினாலும் தலைகள்! தலைகள்!

வாலாஜா சாலையில் யாரும் நடக்கக்கூட முடியாது; அவ்வளவு நெருக்கமான மக்கள் கூட்டம் இருந்தது.

### மாடியெல்லாம்....

அண்ணா சிலையைச் சுற்றியுள்ள மாடிக் கட்டிடங்களில் எல்லாம் மக்கள்ஏறி இடம்பிடித்துக் கொண்டனர்.

புரட்சித்தலைவரின் புனித

(2-ம பக்கம் பார்க்க)



கழக அமைச்சர்களின் பட்டியலை நேற்று இரவு ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரியிடம் புரட்சித்தலைவர் வழங்கியபின் வெளியே வந்தபோது எடுத்தப்படம்.

# ஆளுநர் மாளிகையில் அந்த அரை மணி நேரம்

சென்னை, ஜூன் 9-
அமைதிச்சூழலில் நிசப்தத்தில் துயில் கொள்ளும் ராஜ்பவனத்திற்கு நேற்று இரவு ஏழுமணியிலிருந்தேநிருபர்கள் வரத் தொடங்கி விட்டனர்.

ஒவ்வொரு நிருபரும் ஒருவரை ஒருவர் கேட்கிறார். "எம். ஜி. ஆர், எத்தனை மணிக்கு ராஜ்பவனத்துக்கு வருகிறார்" என்று!

ஏழு, ஏழரை, எட்டு, எட்டரை, இப்படியாக நேரம்கடந்து கொண்டே போனது. ஆளுநர் மாளிகையில் வழங்கப்பட்ட தேநீரில் கூட அதிக நாட்டமின்றி அனைவரும் சாலையைநோக்கியபடியும், டெலிபோனில் தகவல்வருகிறதா என்றும் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

புரட்சித் தலைவர் 9 மணிக்கு ஆளுநர் மாளிகைக்கு வருவதாகத் தகவல் வந்தது.

பத்திரிகையாளர்கள், புகைப்பட நிபுணர்கள் செய்தி படச்சுருள் காமராக்காரர்கள், டெலிவிஷன் படப்பிடிப்பாளர்கள் அனைவரும் ஆவலுடன் வரவேற்பு அறையில் காத்திருந்தனர்.

சரியாக9.01க்குபுரட்சித் தலைவர் கார் போர்ட்டிகோவில் வந்து நிற்கிறது. பொன்னிறத்து மேனியன்-தமிழ்ப்புவியின் நாயகன்-காரிலிருந்து இறங்குகிறார். காமிராக்களின் மின்னல் வெட்டுக்களின் மொய்ப்பு! வரிசையாக நிற்கும் பத்திரிகையாளர்கள் புரட்சித் தலைவருக்கு வணக்கத்தையும் வாழ்த்துக்களையும் தெரிவிக்கிறார்கள்.

மகிழ்ச்சிப் புன்னகையை சிந்தியவாறே, ராஜ்பவனத்தில் ஆளுநர் அமரும் அறைக்குச் செல்கிறார். அறையின் முன் பக்கம் சின்னதாக GOVERNOR என்ற அறிவிப்பு உள்ளது.

புரட்சித் தலைவருடன் நாவலர் பண்ருட்டி, எஸ்.டி.எஸ்., அரங்கநாயகம் வந்திருக்கிறார்கள், எந்தக் கால கட்டத்தில் போய் பத்திரிகையாளர்கள் சந்தித்தாலும் வழக்கமான மெல்லிய பேச்சை விடுத்து உரக்கப் பேசி நகைச்சுவையைச் சிந்தும் பண்ருட்டியார் பத்திரிகையாளர்களிடம் தமாஷாகப் பேசிவிட்டு ஆளுநர் அறைக்குள் புரட்சித்தலைவரைத் தொடர்கிறார்.

பத்திரிகையாளர்கள் வெளியே காத்திருக்கிறார்கள்.

சற்றைக்கெல்லாம் ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி தாம் வசிக்கும் மற்றொரு பகுதியிலிருந்து வந்து பத்திரிகையாளர்கள் இடையே நுழைந்து அவரது அறைக்குச் செல்கிறார்.

அறைசாத்தப்படுகிறது. சுமார் கால் மணி நேரம் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

ஆளுநரிடம் அமைச்சரவை பட்டியலைப்புரட்சித் தலைவர் சமர்ப்பித்துக் கொண்டிருக்கிறார் என்பதை உணருகிறோம்.

அப்புறம் புரட்சித் தலைவரும், அவரைப் பின் தொடர்ந்து நாவலர், பண்ருட்டி, எஸ்.டி.எஸ்., அரங்கநாயகம் ஆகியோரும்வெளியேவருகிறார்கள்.

ஆவல் பொங்கக்காத்திருந்த நிருபர்கள், பிரசவம் பார்த்து விட்டு வெளியே வரும் நர்சிடம் "ஆணா? பெண்ணா?" என்றுபாய்ந்தோடிச்சென்று கேட்பது போல் "யார் யார் அமைச்சர்கள்" என்று கேட்கிறார்கள்.

ஆளுநரிடம் பட்டியலைக் கொடுத்து விட்டேன். முறைப்படி அவர்தான் வெளியிட வேண்டும்என்று நின்றபடியே பதிலளித்துக் கொண்டிருக்கிறார் புரட்சித்தலைவர்.

எத்தனை அமைச்சர்கள் என்ற கேள்விக்கும் புரட்சி தலைவர் பதிலளிக்க மறுத்துவிட்டார்.

"அடுத்த பட்டியல் எப்போது?" என்று கேட்கிறார்கள் 'விரைவில்' என்று புரட்சித்தலைவர் பதிலளிக்கிறார்.

'விரைவில் என்றால்?...' இது ஒருநிருபரின் கேள்வி.

சட்டசபை கூடுவதற்கு முன்னதாக என்று புரட்சித்தலைவர்பதிலளிக்கிறார்.

அதற்குள் ஆளுநரும் வந்துவிடுகிறார்.

தர்பார்மண்டபம் மாதிரி உள்ள ஆளுநர் மாளிகை வரவேற்பு அறையில் ஆளுநரையும் புரட்சித் தலைவரையும் சேர்த்து படம் எடுக்கிறார்கள். அதற்குள் வெளிப் பக்கம் போய்க்கொண்டிருந்தநாவலர், பண்ருட்டி எஸ். டி. எஸ்., அரங்கநாயகம் ஆகியோரையும் புரட்சித்தலைவர் அவசரமாகக் கூப்பிடுகிறார். பின்னர் ஆளுநருடன் எல்லோரும் நின்று படம் எடுத்துக் கொள்கிறார்கள்.

பின்னர் புரட்சித்தலைவரும் மற்றவர்களும் ஆளுநரிடம் விடை பெற்றுத் திரும்புகிறார்கள்.

கவர்னர் பட்வாரி, பத்திரிகையாளர்களிடம் அமைச்சர்கள் பெயர், இலாகா விவரங்களை வெளியிடுகிறார்.

சில பெயர்களை வாசிக்கும் போது அந்தத்தமிழ்ப் பெயர்களில் சில தமது வாயில் நுழையாததால் ஆளுநர் திணறுகிறார் பத்திரிகையாளர்கள் பட்டியலைப் படித்துப்பார்த்து சரியான உச்சரிப்பைச் சொல்கிறார்கள் ஆளுநர் சிரித்துக் கொண்டே 18 அமைச்சர்கள் பெயர், இலாகாக்களையும்வாசித்து விட்டு விடை பெறுகிறார். கணப்பொழுதில் செய்தியாளர் கூட்டம் கலைந்து செய்தி கொடுக்க விரைகிறது.

# புரட்சித்தலைவர் சபதம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

## மேடை அலங்காரம்

(முதல் பக்கத் தொடர்ச்சி)

படங்களும் வைக்கப்பட்டிருந்தன.

புரட்சித்தலைவர் பதவி ஏற்பைக் காண தமிழகம் முழுவதும் இருந்து கழகத் தொண்டர்கள் சென்னை நோக்கி வந்த வண்ணம் இருக்கின்றனர்.

சென்னையில் எங்கு பார்த்தாலும் கழககொடிகளுடன் தொண்டர்கள் அண்ணா சிலையை நோக்கி நடந்த வண்ணம் வந்து கொண்டிருந்தனர்.

கலைவாணர் அரங்கம் அருகே 50 ஆயிரம் பேர்-மக்கள் வெள்ளம் நிரம்பி வழிந்தது. மற்றும் அரங்கத்திற்கு அருகே உள்ள அரசு தோட்டத்தில் கழகத் தொண்டர்கள் 20 ஆயிரத்திற்கும் மேல் உட்கார்ந்து கொண்டு இருந்தனர்.

அண்ணாசிலை சுற்றியும் 20லட்சம் மக்கள் நின்று கொண்டிருந்தனர்.

மவுண்ட்ரோடில் எந்தப் பக்கம் திரும்பி பார்த்தாலும்மக்கள்தலையைத்தவிர வேறு எதுவும் தெரியவில்லை. தாய்மார்களும், பெண்களும் புரட்சித்தலைவர் பதவி ஏற்பைக்காண அண்ணா சிலை அருகே அவர்களுக்கு இட வசதி செய்து தரப்பட்டுள்ளது.

மற்றும் தூரத்தில்உள்ள தொண்டர்கள் புரட்சித் தலைவர், அண்ணா சிலை அருகே சபதம் ஏற்கும்பேச்சைக்கேட்க வசதியாக ஆங்காங்கே ஒலிபெருக்கிகள் வைக்கப்பட்டிருந்தன, அண்ணா சிலையிலிருந்து சித்ரா தியேட்டர்வரை ஒலிபெருக்கி அமைக்கப்பட்டது மேலும் வாலாஜாரோடு, பிளாசா தியேட்டர், பெரியார் சிலை ஆகிய இடங்கள் வரை ஒலிபெருக்கிகள் அமைக்கப்பட்டிருந்தன,

பல லட்சம் மக்கள் முன்னிலையில் புரட்சித்தலைவர் அண்ணாசிலைக்கு மாலை அணிவித்து தமிழக முதல்வராக பதவிஏற்றார். சக அமைச்சர்களும் பதவி ஏற்றனர்.

ஆட்சி மலரும் மாட்சியை காண வெளி மாநிலமக்களும் திரண்டு வந்தனர்.

ஆந்திரமாநிலம் சித்தூர் மாவட்டத்தில் இருந்து ஆந்திர மாநில கழக அமைப்பாளர் கோவர்தன் நாத் தலைமையில் ஏராளமானோர் வந்துள்ளனர்.

பெங்களூர் சாம்ராஜ் பேட்டை தொகுதியைச் சேர்ந்த கழக தோழர்கள் கே. ஆர் கிருஷ்ணராஜ் தலைமையில் 2 பஸ்களில்வந்தனர்.

காஞ்சிபுரத்தில் இருந்து கழக தொண்டர்கள் வெற்றிஜோதியை தொடர் ஓட்டம்மூலம் கொண்டு வந்து புரட்சித்தலைவரிடம் அளிக்கிறார்கள்.

## கடற்கரை பகுதியில்..

சென்னை நகரில் தீவுத்திடல் உட்பட காலியிடங்கள் அனைத்திலும் பஸ்கள் நிறைந்து காணப்படுகின்றன.

கடற்கரையை ஒட்டி காமராஜர் சாலையில் ஆயிரக்கணக்கான பஸ்கள்சாரி சாரியாக நிறுத்திவைக்கப் பட்டுள்ளன.

## வந்தார் எம் தலைவர்

புரட்சித்தலைவர் கலைவாணர் அரங்கில் முதல்வராக பொறுப்பேற்றபின்பு அங்கிருந்து காரில் புறப்பட்டு அண்ணா சிலைக்கு வந்தார்.

முதல்வர் புரட்சித்தலைவர் காரைத் தொடர்ந்து அமைச்சர்களின் கார்கள் வந்தன.

கூடியிருந்த லட்சக்கணக்கான மக்கள் மத்தியில் கார்கள் வந்தன. முக்கடல் சங்கமத்தில் படகுகள் அலைமோதி வருவது போலிருந்தன.

புரட்சித்தலைவர் காரிலிருந்து இறங்கியவுடனேயே கூடியிருந்த லட்சோபலட்சம் மக்களும் 'அண்ணாவின் அரசு வாழ்க' 'புரட்சித் தலைவர் வாழ்க' என்ற ஒலி முழக்கங்களை எழுப்பினர்.

மக்கள் பெருங்கடலின் ஆரவாரத்திற்கு மத்தியில் புன்னகை பூத்த முகத்துடன் புரட்சித்தலைவர் மேடை மீது ஏறி அண்ணாவின் சிலைக்கு மாலை அணிவித்து கரம் குவித்து வணங்கினர்.

## ஆசி பெற்றார்

பதவிஏற்பு விழாவுக்கு பெரியவர் எம் ஜி சக்கரபாணி தமது துணைவியாருடன் வந்திருந்தார் புரட்சித்தலைவரின் துணைவியார் ஜானகி அம்மையாரும் வந்திருந்தார்.

எம். பக்தவத்சலம் தலைமை நீதிபதி எம் எம் இஸ்மாயில் மற்றும் நீதிபதிகள் உயர் அதிகாரிகள் அனைத்துக்கட்சி தலைவர்களும் வந்திருந்தனர்

பதவி ஏற்பு விழா முடிந்ததும் பெரியவா எம் ஜி சக்கரபாணியிடமும், எம பக்தவத்சலத்திடமும் புரட்சித்தலைவர் ஆசி பெற்றார்.

## தமிழ்த்தாய் வாழ்த்து

பதவிஏற்புவிழா தமிழ்த்தாய்வாழ்த்துடன்தொடங்கியது. முதல்வராக புரட்சித்தலைவர் பதவி ஏற்பார் என்று அரசு தலைமை செயலாளர் வி. கார்த்திகேயன் அறிவித்தார், பின்னர் புரட்சித் தலைவருக்கு ஆளுநர் பதவிப்பிரமாணம் செய்துவைத்தார் 11-20ல் இருந்து 1-25 வரை பதவி ஏற்பு விழா நடந்தது. நாட்டுபண் இசைக்க பதவி ஏற்பு விழா முடிவடைந்தது.

Published by K. Ravindran on be half of Thangamani Publications, 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1, First Main Road, United India Colony-Madras-24. Editor: E. PARASURAMAN

# புரட்சித்தலைவர் தலைமையில் 17 அமைச்சர்கள்

## புரட்சித்தலைவர்-பொது நிர்வாகம், லஞ்ச ஒழிப்பு, போலீஸ்★நாவலர்-நிதி, திட்டம்★பண்ருட்டி-மின்சாரம்















சென்னை, ஜூன் 9- தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா பெருந்தலைவர் காமராஜ், மூதறிஞர் ராஜாஜி, கண்ணியத்துக்குரிய காயிதேமில்லத் ஆகியோர் காட்டிய கொள்கை வழியில் செயல்படும் கழக அமைச்சரவையில் புரட்சித் தலைவர் தலைமையில் மொத்தம் 17 அமைச்சர்கள் உள்ளனர்.

ஒவ்வொரு அமைச்சரும் கவனிக்கும் இலாகாக்களின் முழுவிவரம் வருமாறு:-



### முதல்வர் புரட்சித்தலைவர்
**முதல் அமைச்சர்**

பொது, பொது நிர்வாகம், ஐ.ஏ.எஸ்., மாவட்ட ரெவின்யூ அதிகாரிகள், டெபுடி கலெக்டர்கள், போலீஸ், லஞ்ச ஒழிப்பு, பொதுப்பணி

### டாக்டர் நாவலர்
**நிதி, உணவு**

நிதி, திட்டம், சட்டங்கள், தேர்தல், உணவு, மீன் வளம், பிற்பட்ட வகுப்புகள், இளைஞர்அணி, விலைக்கட்டுப்பாடு, முன்னுள் ராணுவத்தினர்.

### பண்ருட்டி ராமச்சந்திரன்
**மின்சாரம்**

மின்சாரம், இரும்பு, உருக்கு கட்டுப்பாடு.

### கே. ஏ. கே.
**கிராமத் தொழில்**

கிராமத் தொழில்கள், குடிசை மற்றும் சிறு தொழில்கள், பால், பால் பெருக்கு, பத்திரப் பதிவு.

### எஸ். டி. எஸ்.
**வருவாய்த்துறை**

வருவாய்த்துறை, வர்த்தகவரிகள், எக்சைஸ், மக்கள்தொகை கணக்கெடுப்பு (சென்ஸஸ்)

### ஆர். எம். வீ.
**தகவல், அறநிலையத்துறை**

தகவல்துறை, விளம்பரம், சினிமா தொழில் நுட்பம், சுற்றுலா, சுற்றுலா வாரியம், சினிமாக்கள் பற்றிய சட்டம், அறநிலையம், காடுகள், சின்கோனு, கனிவளம்

### அரங்கநாயகம்
**கல்வி**

தொழில் நுட்பக் கல்வி உள்பட கல்வி, ஆட்சிமொழி.

### காளிமுத்து
**விவசாயம்**

விவசாயம், விவசாயமறுநிதி, வேளாண்மை பொறியியல் பிரிவு, விவசாயத் தொழில் நுட்பம்.

### பொன்னையன்
**சட்டம்**

சட்டம், நீதி மன்றங்கள், சிறைச்சாலை, எடை அளவுக்கான சட்டம், கம்பெனிகள் பதிவு, கடன் நிவாரணம் உள்பட லேவாதேவி பற்றிய சட்டங்கள், சிட்டுக்கம்பெனி, கூட்டுறவு பற்றிய சட்டங்கள்.

### குழந்தைவேலு
**ஊராட்சி**

நகராட்சி நிர்வாகம், பஞ்சாயத்துகள், பஞ்சாயத்து யூனியன்கள், சமுதாய நல வளர்ச்சி, கிராம கடன்கள், பூமிதானம், கிராம தானம், நெடுஞ்சாலை.

### ராகவானந்தம்
**தொழிலாளர் நலம்**

தொழிலாளர் நலம், வீட்டு வசதி, குடிசை மாற்று வாரியம், குடி நீர்-வடிகால் வாரியம், புள்ளி விவரம், இடவசதி கட்டுப்பாடு, நகர அமைப்பு.

### ஹண்டே
**சுகாதாரம்**

சுகாதாரம்.

### ராஜாமுகமது
**கூட்டுறவு**

விவசாய பணிகள், கூட்டுறவு சங்கங்கள், சிறிய நீர்ப்பாசனம், வக்ப் போர்டு,

### முத்துசாமி
**போக்குவரத்து**

போக்குவரத்து, நாட்டுடைமை ஆக்கப்பட்ட போக்குவரத்து, மோட்டார் வாகன போக்குவரத்து, துறைமுகம்.

### திருநாவுக்கரசு
**பெருந்தொழில்கள்**

பெருந்தொழில், சுரங்கம், ஆலைத்துணிகள்

### எஸ். என். ராஜேந்திரன்
**கைத்தறி**

கைத்தறி, கதர், பாஸ்போர்ட்

### விஜயசாரதி
**அரிஜன நலம்**

அரிஜன நலம், எழுது பொருள், அச்சுத் துறை, அரசு அச்சகம், பத்திரிகை காகித கட்டுப்பாடு, மலைவாழ் மக்கள் நலம், கொத்தடிமை, வேலை வாய்ப்பு, பயிற்சி.

### கோமதி
**சமூக நலம்**

சமூக நலம், மகளிர், குழந்தைகள் நலம், கால்நடை வளர்ப்பு, பிச்சைக்காரர் இல்லம், அனாதை இல்லங்கள், வெளிநாடுகளில் வாழும் இந்தியர்கள், அகதிகள், இடம் பெயர்ந்தவர்கள், நிர்வாக சீர்திருத்தம்,

# புதிய அமைச்சர்களின் வாழ்க்கை குறிப்புகள்

கழக அமைச்சரவையில் புதிதாகப் பொறுப்பேற்றுள்ள அமைச்சர்களின் வாழ்க்கைக் குறிப்புகள் வருமாறு:

## டாக்டர் ஹண்டே
(சுகாதார அமைச்சர்)

டாக்டர் ஹண்டே 1927-ல் பிறந்தார். கீழ்ப்பாக்கம் ஒருங்கிணைந்த மருத்துவக் கல்லூரியில் டாக்டர் பட்டம்பெற்றார்.

இண்டர்மீடியட் படிக்கும் போதே சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டார்.

டாக்டர் ஹண்டே 1965ல் சுதந்திரா கட்சி மூலம் அரசியலில் புகுந்தார். சட்டப்பேரவையில் அவர் சுதந்திராகட்சியின் தலைவராக இருந்து பணி புரிந்துள்ளார்.

மேலவையிலும் அவர் உறுப்பினராக இருந்துள்ளார்.

டாக்டர் ஹண்டே அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகத்தில் சேர்ந்து தீவிரப் பணியாற்றினார். கழகத்தின் அமைப்புச் செயலாளராகப் பணியாற்றி வருகிறார்.

சென்னையில் அண்ணா நகர்தொகுதியில் போட்டியிட்டு கருணாநிதியை திக்கு முக்காட வைத்தார் தொகுதியிலேயே கருணாநிதி பலநாட்கள் சுற்றிச் சுற்றி வரும்படி வைத்தார் கடைசியில் மிகக்குறைந்த வாக்கு வித்தியாசத்தில் அவர் தோல்வியடைந்ததாக அறிவிக்கப்பட்டது.

டாக்டர் ஹண்டே திருமணமானவர். மனைவியும் இரண்டு குழந்தைகளும் உள்ளனர்.

அண்ணாநகர் தொகுதி மக்களின் நல்லெண்ணத்தையும், அன்பையும் பெற்றவர். மூதறிஞர் ராஜாஜி, பேரறிஞர் அண்ணா, புரட்சித்தலைவரின் அன்பையும், ஆசியையும் பெற்றவர்.

புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்துள்ள கழக அமைச்சரவையில் சுகாதார அமைச்சராக ஹண்டே பொறுப்பேற்றுள்ளார்.

## ஈரோடு முத்துசாமி
(போக்குவரத்துத் துறை அமைச்சர்)



ஈரோடு தொகுதியிலிருந்து கழக சட்டப்பேரவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சு. முத்துச்சாமி போக்குவரத்துத் துறை அமைச்சராகப் பொறுப்பேற்றுள்ளார்.

சேலம்மாவட்டம்நெடுங்குளத்தில் 1948ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 16ஆம் தேதி முத்துச்சாமி பிறந்தார்.

ஈரோடு வாசவி கல்லூரியில் பி ஏ படித்து முடித்தார். ஈரோடு தொகுதியிலிருந்து கடந்த முறையும் சட்டப்பேரவைக்கு கழக உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்ட அவர் மீண்டும் அதே தொகுதியில் வெற்றி பெற்றுள்ளார்.

முத்துச்சாமிக்கு வயது 32 ஆகின்றது.

இவரது தந்தை பெயர் ஆர். சுப்பராயக்கவுண்டர். தாய் பெயர் கருப்பாயி அம்மாள்.

கடந்த முறை எம்.எல்.ஏ.வாகஇருந்துகொண்டே முத்துச்சாமி எம். ஏ. படித்து முடித்தார். மாணவர் தலைவராக இருந்து பல போராட்டங்களில் ஈடுபட்டுள்ளார்.

## திருநாவுக்கரசு

அறந்தாங்கி தொகுதியிலிருந்து 2 வது முறையாக சட்டப்பேரவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளவர் திருநாவுக்கரசு.

பெருந் தொழில் சுரங்கத்துறை அமைச்சராக திருநாவுக்கரசு பொறுப்பேற்றுள்ளார்.



திருநாவுக்கரசு புதுக்கோட்டை மாவட்டம் தீயதூரைச் சேர்ந்தவர். அவருக்கு 31 வயதாகிறது அவர் ஒரு வழக்குரைஞர்.

முன்பு சட்டப்பேரவையில் துணை சபாநாயகராக பணியாற்றியுள்ள இவர் இப்போது அமைச்சராகப் பொறுப் பேற்றுள்ளார்.

கழகத்தில் தீவிரமாகப் பணியாற்றியவர்.

## எஸ். என். ராஜேந்திரன்
(கைத்தறித்துறை அமைச்சர்)



கைத்தறித்துறை அமைச்சரான எஸ். என். ராஜேந்திரன் தூத்துக்குடித் தொகுதியிலிருந்து சட்டப்பேரவைக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினராவார்.

இவரது தந்தை நீதிமாணிக்கநாடார் சுயமரியாதை இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டவர்.

எஸ். என். ராஜேந்திரனின் தாய் பெயர் பொன்னுத்தாயி அம்மாள். ராஜேந்திரனுக்கு 44 வயதாகிறது.

இண்டர் மீடியட் வரையில் இவர் பாளையங்கோட்டை செயின்ட் சேவியர் கல்லூரியில்படித்தார். திருச்சி செயிண்ட்ஜோசப் கல்லூரியில் பி. ஏ. படித்து முடித்தார். சட்டக்கல்லூரியில் சட்டப்படிப்பை முடித்தார். மதுரையில் வழக்குரைஞர்தொழிலைத் தொடங்கியஅவர் நெல்லை மாவட்ட வக்கீல் சங்கத் தலைவராக உள்ளார்.

1965ம் ஆண்டு இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் ஈடுபட்டு சிறை சென்றவர்களுக்காக இலவசமாக வாதாடினார்.

புரட்சித்தலைவர் அண்ணாவின் கழகத்தைத்தொடங்கிய போது எஸ். என். ராஜேந்திரனும் கழகத்தில் சேர்ந்தார்.

கழகம் துவங்கிய பின்பு தடுப்புக்காவல் சட்டப்படி அவர் மூன்று முறை கைதானார். கழகப்பொதுக்குழு உறுப்பினராக இருந்து வந்தார்.

தி. மு. கவினரால் அவருடைய அலுவலகம் ஐந்து முறை அடித்துநொறுக்கப்பட்டது.

நெல்லை மாவட்டத்திலேயே அதிகவாக்குகள் பெற்று வென்றார்.

எஸ். என். ராஜேந்திரன் திருமணமானவர். துணைவியாரின் பெயர் மேரி. இவருக்கு 4 மகன்களும் ஒரு மகளும் உள்ளனா.

## விஜயசாரதி

அரக்கோணம் தொகுதியிலிருந்து சட்டப்பேரவை கழக உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட விஜயசாரதி அரிஜன நலத்துறை அமைச்சராகப் பொறுப்பேற்றுள்ளார்.

1954 ஜனவரி 14-ஆம் தேதி பிறந்தவர். விஜயசாரதி அரக்கோணத்தில்

(4-ம் பக்கம் பார்க்க)

# அண்ணா







## புதிய அமைச்சர்களின் வாழ்க்கைக் குறிப்பு

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

பள்ளிப் படிப்பை முடித்த இவர் சென்னை மாநிலக் கல்லூரியில் பி ஏ பட்டம் பெற்றார்.

விஜயசாரதி சிறந்த விளையாட்டு வீரர், பளு தூக்குவதில் வல்லவர்.

கழக அமைச்சரவையிலேயே இளையவர் இவர் தான்.

அரக்கோணத்தில் இவருக்கு மருந்துக் கடை உள்ளது.

இவரது குடும்பத்தில் சகோதரர், சகோதரி, மைத்துனி ஆகியோர் டாக்டர்களாக இருப்பதால் தொகுதியில் உள்ளவர்கள் "டாக்டர் குடும்பம்" என்று அழைப்பார்கள்.

### கோமதி

தஞ்சை மாவட்டம் வலங்கை மான் தொகுதியிலிருந்து சட்டபேரவை கழக உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்ட கோமதி சீனிவாசன் சமூக நலத்துறை அமைச்சராகப் பொறுப்பேற்கிறார்.

குடந்தை அரசினர் பெண்கள் கல்லூரியில் பி ஏ படித்துப் பட்டம் பெற்றவர் கோமதி சீனிவாசன். பின்புகோவை அரசினர் பயிற்சிக் கல்லூரியில் ஆசிரியர் பணிக்குரிய பி.எட். பட்டம்பெற்றார் இவருக்கு வயது 3. வலங்கைமான தொகுதியில் உள்ள நரிய னூர் இவரது சொந்தவூர்

இவரது கணவர் எஸ் சீனிவாசன் தஞ்சையில் வழக்குரைஞராக இருக்கிறார்.

கோமதி கர்னாடக இசையிலும் மாநில விருது பெற்று இருக்கிறார்.









## கழகக் கொடிகளோடு அசைந்தாடி வந்த ரெயில்கள்

சென்னை, ஜுன் 9. புரட்சித்தலைவரின் புனித ஆட்சி மலரும் நன்னாளான இன்று அவரின் பேருரையை கேட்க பல்லாயிரக்கணக்கான மக்கள் ரெயில் மூலம் வந்தனர். சென்னை எழும்பூர், மற்றும், சென்டிரல் ரெயில் நிலையங்களுக்கு இன்று காலை வந்து சேர்ந்த எக்ஸ்பிரஸ்ரெயில்கள் அனைத்தும் கழகக் கொடிகளால் அலங்கரிக்கப்பட்டு வந்தன.

எழும்பூர் வந்து சேர்ந்த ரெயில்களில் ஒவ்வொரு ரெயிலில் இருந்தும் பயணிகள் இறங்கவே அரை மணி நேரத்திற்கு மேல் ஆனது குறிப்பிடத்தக்கது.

## சென்னைக்கு திரண்ட மதுரை-கோவை தொண்டர்கள்

கோவை, ஜுன் 9. கோவை மேற்கு தொகுதியில் 34, 35-வது வட்ட புரட்சித்தலைவர் பாரத் எம். ஜி. ஆர் மன்றத்தின் சார்பாக 500க்கும் மேற்பட்ட தொண்டர்கள் புரட்சித்தலைவர் பதவி ஏற்பைக் காண சென்னைக்கு இரண்டு பஸ்களில் வந்தனர்.

மதுரை போக்குவரத்துக் கழக அண்ணா தொழிற்சங்கத்தினர் புரட்சித்தலைவர் ஆட்சி பீடம் ஏறும் காட்சியைக் காண மூன்று பஸ்களில் சென்னைக்கு வந்துள்ளனர்.





## இணையிலா முதல்வர் வாழ்க!

மாபெரும் வெற்றி கண்டார்
மக்களின் திலகம்; ஆட்சிக்
கோபுரம் மீது தர்மக்
கொடியினை ஏற்றி வென்றார்

யாவரும் வியக்க மீண்டும்
அருந்திறல் முதல்வரானார்;
பூவுலகெங்கும் அண்ணா
புகழ் மணம் பரப்புவாரே!

-கடலூர் துரை